# குழந்தை வரம் அருளும் தமிழ் துதி பாடல்கள்

## பிள்ளையார் துதி

சீர்கொண்ட கரிமுகமு மைந்து கையும்
சிறந்தவா பரணமுடன் ஒற்றைக் கொம்பும்
ஏர்கொண்ட விமலர்கடங் கலியைத் தீர்த்து
எழில்குகற்கு முன்பிறந்து அமரர் மெச்சப்
போர்கொண்ட பிரணவமாய்ப்பிரண வத்துள்
பெருமைசிவ லிங்கமென வந்த மூலம்
கார்கொண்ட பிண்ட மெங்குந் தானாய்
காத்திடுங் கணபதியை வணங்குவோமே

- நக்கீரதேவர்

## 08.021 கோயில் மூத்த திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும் அரு ளைப்புரி யாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே. 1

முன்னின் றாண்டாய் எனைமுன்னம் யானும் அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன் பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வரநின்று போந்தி டென்னா விடில் அடியார்
உன்னின் றிவனார் என்னாரோ பொன்னம் பலக்கூத் துகந்தானே. 2

உகந்தானே அன்புடை அடிமைக் குருகா வுள்ளத் துணர்விலியேன்
சகந்தான் அறிய முறையிட்டால் தக்க வாறன் றென்னாரோ
மகந்தான் செய்து வழிவந்தார் வாழ வாழ்ந்தாய் அடியேற்குன்
முகந்தான் தாரா விடின்முடிவேன் பொன்னம் பலத்தெம் முழுமுதலே. 3

முழுமுத லேஜம் புலனுக்கும் மூவர்க் கும் என்தனக்கும்
வழிமுதலேநின் பழவடி யார் திரள்வான் குழுமிக்
கெழுமுத லேயருள் தந்தி ருக்கஇரங் குங்கொல்லோ என்று
அழுமதுவேயன் றிமற்றென் செய்கேன் பொன்னம் பலத்தரைசே. 4

அரைசே பொன்னம் பலத்தாடும் அமுதே என்றுன் அருள்நோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற் றிருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்துன் அடியேன்பால்
பிரைசேர் பாலின் நெய்போலப் பேசா திருந்தால் ஏசாரோ. 5

ஏசா நிற்பர் என்னைஉனக் கடியான் என்று பிறரெல்லாம்
பேசா நிற்பர் யான்தானும் பேணா நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும் எந்தாய் இனித்தான் இரங்காயே. 6

இரங்கும் நமக்கம் பலக்கூத்தன் என்றென்று ஏமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டாய் ஆள்வா ரிலிமா டாவேனோ
நெருங்கும் அடியார் களும்நீயும் நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரஎங்கள் வாழ்வே வாவென்று அருளாயே. 7

அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்இங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேல் செத்தே போனாற் சிரியாரோ. 8

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி இனித்தான் நல்காயே. 9

நல்கா தொழியான் நமக்கென்றுன் நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா வணங்கா மனத்தால் நினைந்துருகிப்
பல்காலுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி அருளாய் என்னை உடையானே. 10

**திருச்சிற்றம்பலம்**

தில்லை - மாணிக்கவாசகர்

### 5.85 திருச்சிராப்பள்ளி - திருக்குறுந்தொகை

**திருச்சிற்றம்பலம்**

841 மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறும் இறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயுஞ்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே.

842 அரிய யன்றலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்றொழு தேத்தும் அரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்றொழ அங்கிருப் பார்களே.

843 அரிச்சி ராப்பகல் ஐவரா லாட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திரிச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கும் நடக்குமே.

844 தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே.

**திருச்சிற்றம்பலம்** - திருஞானசம்பந்தர்

சுவாமிபெயர் - தாயுமானேசுவரர், தேவியார் - மட்டுவார்குழலம்மை.

## 01.098 நன்றுடையானைத்

### திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை உமையொருபாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே. 1

கைம்மகஏந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முக நாகம் மதியுடன் வைத்தல் பழியன்றே. 2

மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம்மடிகள் அடியார்க்கல்லல் இல்லையே. 3

துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுள்ளெம்
பிறைமல்குசென்னி யுடையவன்எங்கள் பெருமானே. 4

கொலைவரையாத கொள்கையர்தங்கள் மதில்மூன்றும்
சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்
தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்
நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. 5

வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனார்
தையலொர்பாகம் மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங்கொள்வர் ஆரிவர்செய்கை அறிவாரே. 6

வேயுயர்சாரல் கருவிரலூகம் விளையாடும்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனார்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானார்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் றாகாதே. 7

மலைமல்குதோளன் வலிகெடவூன்றி மலரோன்றன்
தலைகலனாகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்
சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்
சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே. 8

அரப்பள்ளியானும் மலருறைவானும் அறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளீரும்மை யேதிலர்கண்டால் இகழாரே. 9

நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை
ஊணாப்பகலுண் டோதுவோர்கள் உரைக்குஞ்சொல்
பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. 10

தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்தன் நலம்மிகுபாடல் இவைவல்லார்
வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. 11

**திருச்சிற்றம்பலம்** - திருஞானசம்பந்தர்

சுவாமி : மாத்ருபூதேஸ்வரர்; அம்பாள் : மட்டுவார்குழலி.

### 02.048 **கண்காட்டு நுதலானுங் - திருச்சிற்றம்பலம்**

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாயம் மதிஇரவி
எண்ணில்வரு மியமானன் இகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற் றான்அடியார் என்றடர அஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தான் உறைகோயில்
பண்மொழியால் அவன்நாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. 6

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானும் அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம்நன் குடையானும் முக்கணுடை இறையவனே. 7

பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்தன் றருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. 8

கள்ளார்செங் கமலத்தான் கடல்கிடந்தான் எனஇவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி உயர்ந்தாழ்ந்தும் உணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும் மேதகுவெண் காட்டானென்(று)
உள்ளாடி உருகாதார் உணர்வுடைமை உணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்கள் அவர்பிறிமின் அறிவுடையீர் இதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

**திருச்சிற்றம்பலம்** - திருஞானசம்பந்தர்

சுவாமி : திருவெண்காட்டீசர்; அம்பாள் : பிரமவித்யாநாயகி.

**துவிதநாக பந்தம்**

சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே. - பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்

**திருப்புகழ் 218 செகமாயை உற்று (சுவாமிமலை)**

செகமாயை யுற்றெ னகவாழ்வில் வைத்த திருமாது கெர்ப்ப ...... முடலூறித்
தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில் திரமாய ளித்த ...... பொருளாகி
மகவாவி னுச்சி விழியாந நத்தில் மலைநேர்பு யத்தி ...... லுறவாடி
மடிமீத டுத்து விளையாடி நித்த மணிவாயின் முத்தி ...... தரவேணும்
முகமாய மிட்ட குறமாதி னுக்கு முலைமேல ணைக்க ...... வருநீதா
முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள் மொழியேயு ரைத்த ...... குருநாதா
தகையாதெ னக்கு னடிகாண வைத்த தனியேர கத்தின் ...... முருகோனே
தருகாவி ரிக்கு வடபாரி சத்தில் சமர்வேலெ டுத்த ...... பெருமாளே. - திரு அருணகிரிநாதர்

## வேற்குழவி வேட்கை

பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் எழுதிய குறிப்பு:-இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்திபிறங்கப் பாடப்படுமாயிற் புத்திரதோடம் நிவர்த்தியாம். சந்ததி விருத்தியாம்.

பதினே ழொன்றும்விழை செய்ய பாத மோலிடநன்
மதிபோன் மமைமுக மண்ட லம்ப குக்கநகுங்
கதியே வேற்குழவீ நின்னைக் காத லாற்றழுவ
நிதியே வாராயோ கைக ணீளு கின்றனவே. 1.

சீவி முடித்தசிகை செம்பொற் சுட்டி நன்குழைகள்
மேவு முறுப்புநிழல் செய்ய வாடும் வேற்குழவீ
ஏவல் கொடுத்தருள வெண்ணி யென்முன் வாராயோ
கூவை வெறுத்தகண்க ளிச்சை கொள்ளு கின்றனவே. 2.

பாவே றுஞ்சவையர் மெச்சிப் பாடும் வேற்குழவீ
சேவே றுன்பவளத் தெய்வ வாயை யேதிறந்து
தூவே றின்கரைக ளிங்குச் சொல்ல வாராயோ
கோவே யென்செவிக ளிச்சை கொள்ளு கின்றனவே. 3.

பொன்னார் கண்டசர நன்கு பூண்ட தங்கவொளிக்
கொன்னார் வேற்குழவீ நல்ல கொவ்வை நின்னிதழை
என்னார் வந்தீர விங்கு நல்க வாராயோ
உன்னா ருண்ணிலையும் வாயு மூறு கின்றனவே. 4.

எண்ணே றும்பலயி லென்ற வேல்பி டித்தசையுங்
கண்ணே செங்குழுவீ யென்றன் கண்க ணாடழகே
தண்ணே றும்வதன முத்தந் தாரா யோயிறிது
நண்ணா வென்னுளந்தா னின்னை நாடு கின்றதரோ 5.

முத்தே மாமணியே முல்லை வெட்சி நன்கடம்பு
வைத்தா ரம்புனைந்தென் முன்னர் வாரா யோவுழலுஞ்
சித்தார் வேற்குழவீ யுச்சி செவ்வன் மோந்துகொள்ள
வித்தே யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ. 6.

ஐயார் நல்லரையிற் பொன்வ டங்க ளாடவுழல்
வையார் வேற்குழவீ யிங்கு வாரா யோகால்கள்
மையார் கண்மலர்க ளின்பு மல்க மோந்துகொள்ள
மெய்யா யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ 7.

பொன்போன் மேனியிலே நல்ல பூம ணங்கமழும்
இன்பே வேற்குழவீ யிங்கு வாரா யோவிரியா
அன்பார் புன்முறுவல் செய்யு மார்விற் பல்லழகென்
துன்பீ ரம்பெனவே னெஞ்சந் துள்ளு கின்றதரோ. 8.

கள்ளார் செங்கரும்பே கண்டு தேனே யின்னமுதுண்
கிள்ளாய் வேற்குழவீ யன்பர் கேளே மாதுமையாள்
பிள்ளாய் கண்ணியொன்று நல்ல பெட்பி னான்றருவேன்
தள்ளா தேகொளற்கென் முன்னர் வாரா யோதகையே. 9.

**மாண்பார் சந்தமுனி யின்ப வாழ்வே நின்னெழிலைக்**

**காண்பார் வேறழகு மிங்குக் காண்பார் கொல்லோநான்**

**ஊண்பா டஞ்சியுனை நன்கு காண்பா னின்றுவந்தேன்**

**வீண்போ காதபடி யிங்ஙன் வாராய் வேற்குழவீ.** 10.

**ஓம் சக்தி கருவளர்சேரி அகிலாண்டேஸ்வரி துணை**

**அபிராமி அந்தாதி**

தாமம் கடம்பு படைபஞ்ச பாணம் தனுக்கரும்பு

யாமம் வயிரவர் ஏத்தும் பொழுதெமெக் கென்றுவைத்த

சேமம் திருவடி செங்கைகள் நான்கொளி செம்மை அம்மை

நாமம் திரிபுரை ஒன்றோடிரண்டு நயனங்களே.

ககனமும் வானமும் புவனமும் காணவிற் காமன் அங்கம்

தகனம்முன் செய்த தவப்பெருமாற்குத் தடக்கையும் செம்

முகனும் முந்நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்

மகனும் உண்டாயது அன்றோ? வல்லி நீ செய்த வல்லபமே. - அபிராமி பட்டர்

குலந்தரும் செல்வம் தந்திடும்

அடியார் படுதுயர் ஆயினவெல்லாம்

நிலந்தரம் செய்யும் நீள் விசும்பருளும்

அருளோடு பெருநிலமளிக்கும்

வலந்தரும் மற்றும் தந்திடும்

பெற்ற தாயினும்ஆயின செய்யும்

நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்

நாராயணா என்னும் நாமமே. - திருமங்கையாழ்வார்

என்னுயிர் தந்து அளித்தவரைச் சரணம் புக்கு
யான் அடையவே அவர் குருக்கள் நிரைவணங்கி
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத் திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

- வேதாந்த தேசிகர்

## சூரிய பகவான் துதி

காசினி இருளை நீக்கும் கதிரொளியாகி எங்கும்
பூசனை உலகோர் போற்றப் புசிப்பொடு சுகத்தை நல்கும்
வாசி ஏழுடைய தேர்மேல் மகாகிரி வலமாய் வந்த
தேசிகா எனைரட்சிப்பாய் சேங்கதிரவனே போற்றி